மலர் 14 இதழ் 330

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190, 76100

"நவமணி"

சந்தா விபரம்

தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் | தபால் மூலமாக |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 6-00 | ரூ. 6-60 |
| 3 மாதம் | ரூ. 18-00 | ரூ. 20-00 |
| 6 மாதம் | ரூ. 36-00 | ரூ. 40-00 |
| 1 வருடம் | ரூ. 72-00 | ரூ. 80-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 21—8—74 புதன்

வெளியூர் 22—8—74 வியாழன்

முதியோர் பென்ஷனுக்கு மேலும் ரூ. 1 கோடி

4-ம் பக்கம்

## கச்சத் தீவுப் பிரச்னை:

# அ. தி. மு. க. திணறல்

## ஒப்பந்தம் சரி என்று சொல்லும் கம்யூனிஸ்டிடம் உறவு ஏன்?

**சென்னை, ஆக. 21—கச்சத்தீவுப் பிரச்னை பற்றி முதல் அமைச்சர் கருணாநிதி இன்று சட்டசபையில் கொண்டுவந்த தீர்மானத்தின் மீது அ. தி. மு. க. உறுப்பினர் ஆலடி அருணா பேசும்போது, அவருக்கும் முதல்வருக்கும் கடும் வாக்குவாதம் ஏற்பட்டது.**

**ஒப்பந்தத்தை எதிர்க்கும் வலது கம்யூனிஸ்டுக் கட்சியுடன் என்ன உறவு என்று தி. மு. க. உறுப்பினர் வீராசாமி கேட்டார். அதற்குச் சரியாகப் பதில்சொல்ல முடியாமல் அருணா திணறினர்.**

தமிழகத்திற்குச் சொந்தமான கச்சத்தீவை மத்திய அரசு இலங்கைக்குத் தானம் கொடுத்திருப்பது தெரிந்ததே.

கச்சத்தீவுப் பிரச்சினை தொடர்பாக இன்று சட்டமன்றத்தில் முதலமைச்சர் கருணாநிதி ஒரு தீர்மானத்தை முன் மொழிந்தார். அதில் கூறப்பட்டிருப்பதாவது:—

"இந்தியாவுக்குச் சொந்தமானதும், தமிழ்நாட்டுக்கு நெருங்கிய உரிமைகள் கொண்டதுமான கச்சத் தீவுப் பிரச்சினையில் மத்திய அரசு எடுத்துள்ள முடிவு பற்றி, இந்தப் பேரவை தனது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்வதோடு, மத்திய அரசு இதனை மறு பரிசீலனை செய்து கச்சத்தீவின் மீது இந்தியாவிற்கு அரசுரிமை இருக்கும் வகையில் இலங்கை அரசுடன் செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்தைத் திருத்தி அமைக்க முயற்சி எடுத்து, தமிழ்நாட்டு மக்களின் உணர்வுகளுக்கு மதிப்பு அளிக்கவேண்டுமென்று வலியுறுத்துகிறது".

மேற்கண்டவாறு கருணாநிதி கூறினார்.

இந்தத் தீர்மானம் வெளிநாட்டு விவகாரமாகையால், இந்தப் பிரச்சினையை மாநில சட்டமன்றம் விவாதிக்க அதிகாரமில்லை என்று இந்திரா காங்கிரஸ் உறுப்பினர் ஏ. சுப்பிரமணியம் கூறினார்.

இந்த தீர்மானம் மத்திய அரசைக் கேட்டுக்கொள்ளும் வகையிலேயே இருப்பதால், இத்தீர்மானத்தைக் கொண்டு வருவதில் தவறு இல்லை என்று சபாநாயகர் கூறினார்.

கச்சத் தீவு பிரச்னைபற்றிய தீர்மானத்தின்மீது அ. தி. மு. கழக உறுப்பினர் ஆலடி அருணா பேசும்போது கூறியதாவது:

கச்சத்தீவு தமிழர்களுக்குத்தான் சொந்தம் என்பதில் இருவேறு கருத்துக் கிடையாது. வரலாற்றில் எதுவும் முடிந்தது என்று எதுவும் கிடையாது. நாம் ஒன்றுபட்டு போராடினால் நல்ல முடிவைக் காணமுடியும். அன்று ராஜாஜி முதலமைச்சராக இருந்தபோது சென்னை நகரைத் தமிழகத்திற்கு தராவிட்டால், நானே போராட்டத்திற்குத் தலைமை தாங்குவேன் என்று மத்திய அரசுக்கு மடல் எழுதினார். அதே போல கச்சத்தீவு பிரச்னையில் எங்கள் உணர்ச்சி மறுக்கப்பட்டால் நானே தலைமைதாங்கிப் போராட்டத்தை நடத்துவேன் என்று முதலமைச்சர் எச்சரிக்கை செய்திருந்தால், இந்தப்பரிதாபகரமானமுடிவு வந்திருக்காது. பெருபாரியை பாகிஸ்தானுக்குக் கொடுத்த போது, மேற்கு வங்காளத்திலிருந்த காங்கிரஸ் ஆட்சி மத்திய அரசுக்கு எதிராக வழக்குத் தொடர்ந்து, துக்க தினம் கொண்டாடியது. தமிழக அரசு கச்சத் தீவுப் பிரச்னையில் போதிய கவனம் செலுத்தவில்லை. மத்திய அரசு கச்சத்தீவுபற்றி தன்னிடம் ஆலோசனை செய்யவில்லை என்று முதல் அமைச்சர் திருச்சியிலும் மதுரையிலும் பாபநாசத்திலும் பேசியிருக்கிறார்.

### பேசியதில் என்ன தவறு?

முதல்வர் (குறுக்கிட்டு):— மதுரையிலும் திருச்சியிலும் பாபநாசத்திலும் பேசியதில் என்ன தவறு? பிரதமர் என்னை அழைத்துப் பேசவில்லை. ஆனால்நான் இரண்டு தடவை சொல்லியிருக்கிறேன். வெளிநாட்டு இலாகா செயலாளர் இருமுறைச் சந்தித்தார். விருந்து ஒன்றில் வெளிநாட்டு அமைச்சர் இது குறித்துக் கேட்டார், ஏற்கெனவே இலங்கையுடன் ஒப்பந்தம் செய்துகொண்டபோது, அன்று அமைச்சராக இருந்த ராமையாவை அழைத்து மத்திய அரசு பேசியது. இப்பொழுது அப்படி அழைக்கவில்லை.

ஆலடி அருணா:- கச்சத்தீவு பற்றி உங்களுடன் ஆலோசிக்கவில்லையா?

கருணாநிதி:- பிரதமரிடம் நான் சொன்னவைகள், கேவல்சிங் என்னைச் சந்தித்த போது பேசப்பட்ட விஷயங்கள் எல்லாவற்றையும் அவ்வப்போது நிருபர்களிடம் சொல்லியிருக்கிறேன்.

### சூடாக்கிய வாதம

அருணா:—தன்னை யாரும் கலக்கவில்லை என்று வாதத்தை முதல் அமைச்சர் சூடாக்கிய பிறகு, அவருடைய வாதத்தை நம்பி டெல்லி மேலவையில் முதல் அமைச்சரைக் கலக்கவில்லை என்று மாரிசாமி பேசியிருக்கிறார். ஆலோசனை செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் அனுமதி தரவில்லை என்று சொல்கிறார்கள் இப்போது.

கருணாநிதி:-கடந்த ஓராண்டு காலத்தில் கச்சத்தீவு பற்றி ஐந்தாறு முறை பேசப்பட்ட விஷயங்களை நிருபர்களிடம் அவ்வப்போது சொல்லியிருக்கிறேன்.

அருணா:-சந்தித்துப்பேசியது வேறு, ஆலோசனை நடத்தியது வேறு என்று இப்போது முதல்வர் சொல்கிறார்.

கருணாநிதி: பிரதமர் என்னை அழைத்து ஆலோசிக்கவில்லை.

அருணா: மத்திய அரசு ஆலோசனை நடத்தியதா? இல்லையா?

கருணாநிதி: கேவல் சிங் என்னுடன் இது பற்றிப் பேசினார். தமிழக அரசு இதை ஏற்காது என்று நான் சொன்னேன். பிரதமரிடமும் சொல்லி யிருக்கிறேன். ஜனவரியில் நடந்த மேலவைக் கூட்டத்திலும் சொல்லியிருக்கிறேன்.

அருணா: இருமுறை விரிவான ஆலோசனை நடத்தப்பட்டது என்று சுவரண்சிங் சொல்லி யிருக்கிறார்.

கருணாநிதி:-சுவரண்சிங் அப்படிச் சொன்னதும், தமிழக அரசு ஒப்புக் கொண்டதா என்று ராபிராய் கேட்டிருக்கிறார். ஆலோசனை நடத்தப்பட்டதா என்ற கேள்விக்கு பதில் அளிப்பதாகச் சொல்லி தந்திரமாகத் தப்பி இருக்கிறார் சுவரண்சிங்.

### திரைமறைவில் அனுமதியா?: கருணாநிதி மறுப்பு

அருணா: தந்திரமாகத் தப்பியவர் சுவரண்சிங் அல்ல. நம்முடைய முதல்வர்தான் தந்திரமாகத் தப்பியிருக்கிறார். ஆலோசிக்கப்பட்டது. ஆனால் அனுமதிக்கவில்லை என்று இப்போது சொல்கிறார். திரைமறைவில் அனுமதி தந்திருக்கிறார்.

கருணாநிதி:-இது உண்மைக்குப் புறம்பானது. அவதூறானது. பிரதமர் என்னை அழைத்துப் பேசவில்லை. எந்த மத்திய அமைச்சரும் இது பற்றி என்னுடன்பேசவில்லை. கேவல்சிங் இருமுறை சந்தித்தார். கச்சத்தீவு பற்றிய நம்முடைய திட்டவட்டமான கொள்கையை சொல்லியிருக்கிறோம்.

அருணா: ஒப்பந்தத்திற்கு முன்பு பெரிய போராட்

7-ம் பத்தி பார்க்க

(5-ம் பத்தி தொடர்ச்சி)

டத்தை நடத்தியிருக்கலாம். எங்கள் குற்றச்சாட்டு நீங்கள் அதற்கு உடந்தை என்பது தான். இலங்கைப் பிரதமர் இங்கே வந்தபோது, அவருக்கு மாலைஅணிவித்து வரவேற்றீர்கள். ஒரு மகஜர் தரக்கூடாதா என்று எங்கள் தலைவர் (எம். ஜி. ஆர்.) கேட்ட போது அதைப்பற்றிக் கேவலமாக விமர்சித்தீர்கள்.

1961-ம் ஆண்டு இலங்கைப் பிரதமருக்கு இங்குள்ள இலங்கை ஹைகமிஷனர் மூலம் அன்று ஒரு மகஜரைக் கொண்டுபோய் சேர்த்தார். அந்த மகஜர் ஐ. நா. சபை பொதுச் செயலாளருக்குக் கூடக் கொடுக்கப்பட்டது. அப்போது அதைப் பார்த்துக் காங்கிரஸ்காரர்கள் கிண்டல் செய்தார்கள். இப்போது நமது முதல்வரும் காங்கிரஸ்காரராக மாறிவருகிறார்.

### துரோகி ஆகக்கூடாது

கருணாநிதி: வெளிப்படையாக காங்கிரஸ்காரராக ஆகலாம். ஆனால் துரோகியாக ஆகக்கூடாது.

அருணா: யார் துரோகி என்பது 76-ல் முகமூடி கிழிக்கப்படும்.

கருணாநிதி: நன்றிகொன்றவர்கள் துரோகிகள்.

அருணா: நன்றிகொன்றவர்கள் யார்? நீங்கள் நன்றியில்லாமல் இருந்ததால்தான் தி. மு. கழகம் 3 கூறாகப் பிரிந்து இருக்கிறது. தேவையில்லாத விவாதத்தைக் கிளப்ப வேண்டாம். அப்படிக் கிளம்பினால் அதற்குப் பதில்தரத் தயாராக இருக்கிறேன். ஊரை ஏமாற்றவே இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்திருக்கிறீர்கள்.

இவ்வாறு ஆலடி அருணா கூறினார்.

### வீராசாமி கேள்வி

அப்போது வீராசாமி எழுந்து, அ. தி. மு. க.வோடு வலது கம்யூனிஸ்டு உறவு வைத்துக் கொண்டிருக்கிறது. அவர்கள் கச்சத்தீவு ஒப்பந்தம் சரி என்று சொல்லியிருக்கிறார்கள். அது சரியா?

கருணாநிதி: குடியரசுத்தலைவர் தேர்தலில் நீங்கள் கூட இ. காங்கிரஸ் வேட்பாளரை ஆதரித்தீர்கள்.

வீராசாமி: நீங்களும்தான் ஆதரித்தீர்கள்.

அருணா: அவர்கள் (வ. கம்யூ.) எங்களுடைய தோழமைக் கட்சி. அதே சமயத்தில் எதிர்க்கட்சி. இது ஊரறிந்த உண்மை.

## கச்சத்தீவு தீர்மானம்: சத்தியவாணி எதிர்ப்பு

சென்னை, ஆக. 21—கச்சத்தீவு பற்றிய தீர்மானத்துக்கு தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக்கழகத்தலைவர்சத்தியவாணிமுத்து எதிர்ப்புத் தெரிவித்தார்.

முதல்வர் கருணாநிதி கொண்டுவந்த கச்சத்தீவு தீர்மானத்தை ஆதரித்து கந்தசாமி (பா. பி.) வகாப் (லீக்) நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி (தி. மு. க.) ஏ. [illegible] ராஜா (தி. மு. க.) மணலி கந்தசாமி (த. நா. கம்.) ஆகியோர் பேசினர்.

சத்தியவாணிமுத்து, என். கே. பழனிச்சாமி (கம்யூ.), ஏ. ஆர். மாரிமுத்து (இ. காங்.) ஆகியோர் எதிர்ப்புத் தெரிவித்துப் பேசினர்,

## தமிழ்நாட்டு வரலாறு: முதல் தொகுதி தயார்

சென்னை, ஆக. 21—டாக்டர் மு. வரதராசனார் தலைமையில் அமைக்கப்பட்டுள்ள குழு தமிழ்நாட்டு வரலாற்றை எழுதிவருவதாகவும், இதன் முதல் தொகுப்பு எழுதி முடிக்கப்பட்டுவிரைவில்வெளியிடப்படவிருக்கிறது என்றும் கல்வியமைச்சர் நெடுஞ்செழியன் இன்று சட்டசபையில் தெரிவித்தார்.

பாண்டிச்சேரியில்

## அ. தி. மு. க.-வலது கம்யூனிஸ்டு கட்சி கூட்டணி உடைகிறது

**பாண்டிச்சேரி, ஆக. 21—பாண்டிச்சேரியில் அ. தி. மு. க. - வலது கம்யூனிஸ்டு கட்சி இடையே பிளவு வலுவடைந்து இரு கட்சிகளின் கூட்டணி உடையும் கட்டம் ஏற்பட்டுள்ளது.**

சமீபத்தில் தமிழக வலது கம்யூனிஸ்டு கட்சி செயலாளர் கல்யாண சுந்தரம் புதுவைக்கு வந்திருந்தார்.

அவர் கடந்த சில தினங்களுக்கு முன்னர் இங்குள்ள ரோடியர் மில் வேலை நிறுத்த விவகாரத்தில் அ. தி. மு. க—வலது கமயூனிஸ்டு தொழிலாளர் இடையேமோதல்கள் நடந்துள்ளது பற்றி பாண்டிச்சேரி வலது கம்யூனிஸ்டுகாரர்களுடன் ரகசியப் பேச்சு நடத்தினார்.

ஆனால் அவர் பாண்டிச்சேரி அ. தி. மு. க. மாநில அமைப்பாளரையோ, மற்றவர்களையோ சந்திக்கவில்லை.

கல்யாண சுந்தரம் பாண்டிச்சேரிக்கு வந்து போனது பற்றி பாண்டிச்சேரி மாநில அ. தி. மு. க. அமைப்பாளர் டி. ராமசந்திரனிடம் கேட்டபோது கல்யாணசுந்தரம் வந்தது எங்களுக்குத் தெரியாது என்றார்.

கல்யாணசுந்தரம் மீண்டும் பாண்டிச்சேரிக்கு வருவதாக பாண்டிச்சேரி வலது கம்யூனிஸ்டு கட்சி அலுவலக மூலம் தெரிய வருகிறது. இந்தத் தடவை வரும்போதாவது அவர் அ. தி. மு. க. தலைவர்களை சந்திப்பாரா என்பதை அரசியல் வட்டாரங்கள் உன்னிப்பாகக் கவனித்து வருகின்றன.

ஆகவே இரு கட்சிகளின் கூட்டணி பாண்டிச்சேரியில் அடுத்த தேர்தல் வரை நீடிக்குமா அல்லது உடைந்துவிடுமா என்பதுவும் கேள்விக்குறியாக உள்ளது.





நெல்லை மாவட்டம் பாஞ்சாலங்குறிச்சியில் கட்டப்பட்டுள்ள கட்டபொம்மன் கோட்டையை முதலமைச்சர் கருணாநிதி திறந்து வைத்தபோது எடுத்த படம்.

உசிலம்பட்டியில்

## தேவருக்குச் சிலை: சொந்த செலவில் சிவாஜி ஏற்பாடு

**சென்னை, ஆக. 21—பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் உருவச்சிலையை நடிகர் சிவாஜி கணேசன் தனது சொந்தச் செலவில் அமைக்கிறார்.**

மதுரை மாவட்டம் உசிலம்பட்டியில் இந்தச்சிலை அமைக்கப்படும்.

சிலை அமைப்பது சம்பந்தமாக, அகில இந்திய பார்வர்டு பிளாக் கட்சி செயலாளர் கந்தசாமி எம். எல். ஏ., தவமணிதேவர், டிவி. ராஜதேவர் பெருமாள் தேவர் மற்றும் உசிலப்பட்டி ஊராட்சி ஒன்றியத் தலைவர் ஆகியோர் இன்று நடிகர் சிவாஜி கணேசனைச் சந்தித்துப் பேசினர்.

அப்போது, முத்துராமலிங்கத் தேவரின் சிலையை (வெண்கலத்தில்) உருவாக்கும் செலவை தாம் ஏற்றுக் கொள்வதாக சிவாஜி கணேசன் கூறினார்.

சிலை வடிக்கும் வேலை சிற்பி ஜெகநாதனிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

## ராதாகிருஷ்ணன் உடல் நிலை அபிவிருத்தி

சென்னை, ஆக. 21—நேற்று சென்னை தனியார் மருத்துவமனை ஒன்றில் சிகிச்சைக்கு சேர்க்கப்பட்ட முன்னாள் ஜனாதிபதி ராதாகிருஷ்ணனின் உடல்நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது.

## இ. கம்யூனிஸ்ட் பாத யாத்திரை

—4ம் பக்கம்

## பழைய காங்கிரஸ், அண்ணா தி. மு. க. கூட்டு ஊர்வலம்

சேலம் ஆக. 21—சேலம் அருகே பழைய காங்கிரஸ் கட்சியும், அ. தி. மு. க.வும் கூட்டாக ஊர்வலம் நடத்தின.

இந்த ஊர்வலத்தில் வலது கம்யூனிஸ்டு கட்சியினரும் கலந்துகொண்டனர்.

இந்த ஊர்வலம், சேலம் நகரை அடுத்த நரசோதிப்பட்டி, ரெட்டியூர் கிராமங்களிலிருந்து கிளம்பி சேலம் நகருக்கு வந்தது.

அ. தி. மு க பழைய காங்கிரஸ், வலது கம்யூனிஸ்டு கட்சிகளைச் சேர்ந்த சுமார் 1,000 பேர் கூட்டாக இந்த ஊர்வலத்தை நடத்தினர்

அவர்கள் தங்கள் கட்சிக் கொடிகளைப் பிடித்துக் கொண்டு 2 மைல் தூரம் நடந்து சேலம் மாவட்ட கலெக்டர் அலுவலகத்துக்கு வந்தனர்.

தங்கள் பகுதியில் நியாய விலைக்கடை ஒன்றை ஏற்படுத்தி அரிசி மற்றும் இதர பொருட்களை நியாய விலையில் அளிக்க வேண்டும் என்று கோரி அவர்கள் மாவட்ட கலெக்டரிடம் ஒரு மகஜர் அளித்தனர்.

பின்னர் அவர்கள் ஊர்வலமாகவே திரும்பிச் சென்றனர்.

மாலையில் விலைவாசி உயர்வைக் கண்டித்து பழைய காங்கிரஸ், அ. தி. மு. க., வலது கம்யூனிஸ்டு கட்சிகள் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது.

அடுத்த பொங்கல் தினத்துக்கு முன்:

# சென்னையில் கூடுதலாக 250 பஸ்கள் விடப்படும்

சென்னை, ஆக. 21— சென்னை நகரில் கூடுதலாக 250 பஸ்கள் விடப்படும் என்று போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் கூறினார், கேள்வியொன்றுக்கு அமைச்சர் பதிலளிக்கையில் கூறியதாவது:—

''பெருநகர போக்குவரத்து மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் தமிழ்நாட்டிற்கு மூன்று கோடி ரூபாய் நிதி ஒதுக்கீடு செய்ய கொள்கை அளவில் மத்திய அரசு ஒப்புக்கொண்டு தகவல் தெரிவித்துள்ளது. இதன் மூலம் நகரப் போக்குவாத்து நெரிசலை பெருமளவுக்கு சமாளிக்கமுடியும் என்பதுடன் அடுத்த ஆண்டு ஜனவரி 14-ம் தேதிக்குள் (தைப் பொங்கல் நாள்) நகரில் போக்குவரத்து நெரிச்சலைத் தவிர்க்க கூடுதலாக 250 பஸ்கள் விடப்படும்''. இவ்வாறு அமைச்சர் எஸ். ராமசந்திரன் தெரிவித்தார். துணைக் கேள்விக்கு அமைச்சர் பதில் அளிக்கையில் கூறியதாவது:-

அரசாங்க எக்ஸ்பிரஸ பஸ துறையின் மூலம் 241 வழித்தடங்களில் துரித பஸகள் விடப்படுகின்றன. இவற்றில் வாரத்திற்கு 9 பஸகள் என்கிற எண்ணிக்கையில் தான் பழுதுபட்டு வழியில்

(5-ம் பத்தி பார்க்க)

# $5\frac{3}{4}$ லட்சம் ஓட்டு அதிகம் பெற்று பக்ருதீன் வெற்றி

புதுடெல்லி, ஆக. 21—ஜனதிபதி தேர்தலில் இ. காங்கிரஸ் வேட்பாளர் பக்ருதீன் அலி அகமது வெற்றி பெற்றார்.

எதிர்த்துப் போட்டியிட்ட சௌத்ரியைவிட சுமார் $5\frac{3}{4}$ லட்சம் ஓட்டுக்கள் அதிகமாக பக்ருதீன் பெற்றிருந்தார்.

ஜனதிபதி தேர்தலில், பாராளுமன்றத்தின் இரு சபைகளின் உறுப்பினர்களும், மாநில சட்ட சபைகளின் உறுப்பினர்களும் ஓட்டுபோட்டார்கள்.

உறுப்பினர்களின் ஒவ்வொரு ஓட்டுக்கும், ''மதிப்பு எண்'' மார்க்கு உண்டு. பாராளுமன்ற உறுப்பினர்கள் ஒவ்வொருவரின் ஓட்டு மதிப்பு 723. மாநில சட்டசபைஉறுப்பினர்களின் ஓட்டு மதிப்பு, மாநிலத்துக்கு மாநிலம் வித்தியாசப்படும். (எடுத்துக்காட்டாக தமிழக எம். எல். ஏ. ஓட்டு மதிப்பு 176. உத்தரபிரதேசம் 208. நாகாலாந்து 9.)

ஓட்டு எண்ணிக்கை நேற்று காலை 11-30மணிக்கு. டெல்லியில் தொடங்கியது.

முதலில், ஒவ்வொரு மாநிலத்திலும் பதிவான ஓட்டுகள் எண்ணப்பட்டன. பிறகு, பாராளுமன்ற ஓட்டுகள் எண்ணப்பட்டன.

## ஓட்டு நிலவரம்

இறுதி ஓட்டு நிலவரம் வருமாறு:—

| | |
|---|---|
| பக்ருதீன் அகமது | 7,65,587 |
| சவுத்திரி | 1,89,196 |

(அதாவது மொத்த ஓட்டுகளில் 80 சதவீதம் பக்ருதீனுக்கும், 20 சதவீதம் சவுத்திரிக்கும் கிடைத்தன.)

தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டதும், டெல்லி மந்திரிகளும், பாராளுமன்ற உறுப்பினர்களும் பக்ருதீனுக்கு மாலை அணிவித்து பாராட்டு தெரிவித்தனர்.

ஜனதிபதி தேர்தல் 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறுகிறது. தற்போதைய ஜனதிபதி கிரியின் பதவிக்காலம் முடிவடைவதால், இந்த தேர்தல் நடந்தது.

## மந்திரி பதவி ராஜிநாமா

60 வயதான பக்ருதீன் அகமது டெல்லி மந்திரி பதவியை ராஜினுமா செய்துவிட்டு, இ. காங்கிரஸ் சார்பில் போட்டியிட்டார். அவரை எதிர்த்து திரிதீப் சவுத்திரியை ப. காங்கிரஸ், ஜனசங்கம், சுதந்திரா முதலிய 8 எதிர்க்கட்சிகள் நிறுத்தின.

இந்த தேர்தலில், பக்ருதீன் அகமதுவுக்கு தி. மு. கழகம் ஆதரவு தெரிவித்தது.

வலது கம்யூனிஸ்டு, முஸ்லிம் லீக் ஆகிய கட்சிகள் ஓட்டுப் பதிவில் கலந்துகொள்ளாமல் நடுநிலைமை வகித்தன.

## ஒரு லட்சம் ஓட்டு அதிகம்

பக்ருதீனுக்கு 6,70,000 ஓட்டுகள் கிடைக்கும் என்று இ. காங்கிரஸ் எதிர்பார்த்தது.

தி. மு. கழகமும், மற்றும் சில எதிர்க்கட்சிகளும் அளித்த ஆதரவின் காரணமாக 7,65,587 ஓட்டுகள் கிடைத்துள்ளன.

தமிழ்நாட்டில் பக்ருதீன் அகமதுவுக்கு 33,792 ஓட்டுகளும் சவுத்திரிக்கு 3,344 ஓட்டுகளும் கிடைத்தன.

மணிபுரி, மேகாலயா, நாகாலாந்து ஆகிய மூன்று மாநிலங்களில், சவுத்திரிக்கு ஒரு ஓட்டு கூட கிடைக்கவில்லை.

புதிய ஜனதிபதி பதவி ஏற்பு விழா, வருகிற சனிக்கிழமை (24-ந் தேதி) நடைபெறும்.

## கருணாநிதி வாழ்த்து

புதிய ஜனதிபதி பக்ருதீன் அகமதுவிற்கு தமிழக முதல்-அமைச்சர் கருணாநிதி வாழ்த்து தந்தி அனுப்பி உள்ளார்,

அதில் கூறப்பட்டு இருப்பதாவது;

தங்கள் வெற்றிக்கு என் நெஞ்சம் நிறைந்த பாராட்டுக்கள்.

இந்தியாவில் கட்டிக் காக்கப்பட வேண்டிய ஜனநாயக லட்சியத்திற்கு, தங்கள் பதவிக்காலம் அரணாக அமையும் என்று நம்புகிறேன்.

மேற்கண்டவாறுகருணாநிதி தனது செய்தியில் கூறியுள்ளார்.

## சவுத்திரி வாழ்த்து

தோல்வி அடைந்த சவுத்திரி விடுத்த அறிக்கையில், ''புதிய ஜனதிபதியாக தேர்ந்து எடுக்கப்பட்டுள்ள பக்ருதீன் அகமதுவுக்கு என் வாழ்த்துக்கள். நான் கொள்கை ரீதியில் தான் அவரை எதிர்த்து போட்டியிட்டேனே தவிர, தனிப்பட்ட முறையில் அல்ல'' என்று குறிப்பிட்டு உள்ளார்.

அவர் பக்ருதீன் அகமதுவை நேரில் சந்தித்து மாலை அணிவித்தார்.



ஜனதிபதி தேர்தலில் வெற்றி பெற்றுள்ள பக்ருதீன் அலி அமகமது. சென்னை வந்திருந்தபோது அவருக்கு, முதல் அமைச்சர் கருணாநிதி மாலை அணிவித்து வாழ்த்து தெரிவித்த போது எடுத்த படம்.

# திருட்டு மருந்துகள் விற்பனை: பம்பாயில் பலர் கைது

பம்பாய், ஆக 21— மருந்து விற்பனையில் செய்யப்பட்ட ஒரு பெரிய மோசடியை மகாராஷ்டிர மாநில உணவு, மருந்து கட்டுப்பாடு நிருவாக அதிகாரிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

பல மருந்துக் கடைகளையும் வீடுகளையும் சோதனை செய்து ராணுவ நகரசபை இ. எஸ். ஐ. ஆஸ்பத்திரிகளிலிருந்து திருடிக்கொண்டு வந்து விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்த மருந்துகளையும் போலிமருந்துகளையும் அதிகாரிகள் கைப்பற்றினர்கள்.

4 மருந்து விற்பனை அலுவலர் உள்பட பலர் கைது செய்யப்பட்டார்கள்.

அமெரிக்க

# கோடீசுவரர் ராக்பெல்லர்: புதிய துணை ஜனதிபதி

வாஷிங்டன், ஆக. 21— அமெரிக்காவின் துணை ஜனதிபதியாக கோடீசுவரர் ராக்பெல்லர் நியமிக்கப்பட இருக்கிறார்.

துணை ஜனதிபதி பதவிக்கு ராக்பெல்லரை புதிய ஜனதிபதி போர்ட் தேர்ந்தெடுத்துள்ளார். அமெரிக்காவின் இரு சட்டமன்றங்களும் அங்கீகாரம் அளித்ததும் ராக்பெல்லர் துணை ஜனதிபதி பதவியை ஏற்பார்.

ராக்பெல்லர் உலகின் மிகப் பெரிய பணக்காரர்களில் ஒருவர். அவருக்கு வயது 66. உலகின் பல்வேறு அமைப்புகளுக்கு ராக்பெல்லர் நன்கொடை அளித்திருக்கிறார்.

அவர் முன்னர், ரூஸ்வெல்ட், ட்ரூமன் ஐசனேவர் ஆகியோரின் கீழ் பணியாற்றியிருக்கிறார்.

இதுவரை துணை ஜனதிபதியாக இருந்த போர்ட். நிக்சனின் ராஜிநாமாவுக்குப்பிறகு ஜனதிபதியாகிவிட்டதால் இப்போது புதிய துணை ஜனதிபதி நியமிக்கப்படுகிறார்.

சட்டமன்றத்தில் தீர்மானம்

# தனியார் மருத்துவக் கல்லூரி நிறுவ தடை

சென்னை, ஆக. 21— தனியார் நிறுவனங்களால் மருத்துவக் கல்லூரி துவக்கப்படுவதைத்தடை செய்யவும், ஏற்கெனவே தனியார் துறையில் உள்ள மருத்துவக்கல்லூரிகளை ஒழுங்குபடுத்தவும் இன்றைய சட்டமன்றக் கூட்டத்தில் அமைச்சர் அன்பழகன் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார்.

அதன்மீது இன்று விவாதம் நடைபெற்றது.

## 1-ம் பத்தித் தொடர்ச்சி

நின்று விடுகின்றன. மற்றவைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் இது மிகக் குறைவு. இவ்வாறு அமைச்சர் கூறினார். அரசாங்க எக்ஸபிரஸ பஸ பழுது பட்டதன் காரணமாக திருச்சியிலிருந்து சென்னைக்கு வருவதற்குள் மூன்று எக்ஸ்பிரஸ்களில் மாறி மாறி வரவேண்டியதன் காரணமாக ஏற்பட்ட சிரமத்தை ஒய். வெங்கடேசுவர தீட்சதர் (ப. காங்.) மேலவையில் சுட்டிக்காட்டினார். அதற்கு பதிலளிக்கும் போதுதான் அமைச்சர் மேற்கண்டவாறு பதிலளித்தார். இம்மாதிரி குறைபாடுகள் ஆங்காங்கே ஏற்படும்போது தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று அமைச்சர் சொன்னார்.

# விஷ ஊசி வழக்கு

# முதல் எதிரியின் உடல் நிலை பாதிப்பு: கோர்ட்டில் படுத்திருக்க அனுமதி

சென்னை, ஆக.21—விஷஊசி வழக்கு விசாரணையின்போது, முதல் எதிரி வைத்தியின் உடல் நிலை பாதிக்கப்பட்டதால் கோர்ட்டில் படுத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டார்.

கஸ்டம்ஸ் அதிகாரிகள்போல் நடித்து, விஷஊசி போட்டு, 7 பேர்களைக் கொன்றதாக குற்றஞ்சாட்டப்பட்டுள்ள வைத்தி மற்றும் 7 பேர் மீதான வழக்கு, சென்னை செஷன்ஸ் கோர்ட்டில் நீதிபதி விஜயரங்கம் முன்னிலையில் நடைபெற்று வருகிறது.

முன்னதாக இவ்வழக்கில் 128 வது சாட்சியாக ஆஞ்சி நாயுடு என்ற புகைப்படக்காரர் (இவர் புகாரி தம்பியின் எலும்புக்கூட்டை புகைப்படம் எடுத்தவர்), 129, 130-வது சாட்சிகளாக ஆந்திர போலீஸ்காரர்கள் சம்பத். கொண்டா ரெட்டி ஆகியோர் விசாரிக்கப்பட்டனர்.

போலீஸ் தரப்பு 131 வது சாட்சியாக கைரேகை பதிவு நிபுணர் குண்டுராவ் விசாரிக்கப்பட்டார். புகாரி தம்பியின் கைரேகைகளை ஒப்பிட்டு பார்த்ததை கோர்ட்டில் விளக்கி கூறினார்.

பின்னர் போலீஸ் தரப்பு 132வது சாட்சியாக சென்னை எழும்பூரில் உள்ள செந்தில் டிராவல்ஸ் என்னும் 'டூரிஸ்ட்' கம்பெனி ஊழியர் சிவராமன் விசாரிக்கப்பட்டார்.

1972-ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் ஒரு நாள், ஒரு முஸ்லிம் பெரியவர், வெளியூர் செல்வதற்காக டிக்கெட் வாங்கிக் கொண்டு, வெளியில் உட்கார்ந்திருந்தபோது இரண்டு கஸ்டம்ஸ் அதிகாரிகள் அந்த முஸ்லிம் பெரியவரிடம் கள்ளப் பணம் விஷயமாக விசாரித்து, அழைத்துச் சென்றதாக சிவராமன் கூறினார். அவரை எதிர்தரப்பு வக்கீல்கள் குறுக்கு விசாரணை செய்தனர்.

## டாக்டர் சாட்சியம்

நேற்று, 101-வது சாட்சியாக மூர்த்தி உடலை பிரேத பரிசோதனை செய்த டாக்டர் குப்தா, 5-வது கொலையான சதக் இப்ருகிம் உடலை பிரேத பரிசோதனை செய்தது பற்றி மீண்டும் விசாரிக்கப்பட்டார். அப்போது அவர் கூறியதாவது:

அந்த நபருக்கு சுமார் 40 வயதிருக்கும். அந்த நபரின் உடலின் பல பாகங்களில் பெட்ரோலினுல் எரிக்கப்பட்ட தீக்காயங்கள் இருந்தன. வயிற்றிலுள்ள உணவு ஜீரணமாகாமல் இருந்தது. 9-1-72 அன்று அந்த உடலை பிரேத பரிசோதனை செய்தேன். சுமார் 36 மணி நேரத்திற்கு முன்பு அவர் இறந்திருக்க வேண்டும்.

இவ்வாறு டாக்டர் குப்தா கூறினார். அவரை எதிரிகளின் வக்கீல்கள் குறுக்கு விசாரணை செய்தனர்.

பின்னர் போலீஸ் தரப்பு 133வது சாட்சியாக மொகில் வெங்கடகிரி காவல் நிலயத்தில் சப் இன்ஸ்பெக்டராக பணியாற்றிய கிருஷ்ண மூர்த்தி விசாரிக்கப்பட்டார்.

## முதல் எதிரி உடல்நிலை

நேற்று விசாரணை தொடங்கிய சமயத்தில் இருந்து, முதலாவது எதிரி வைத்தி உடல் நிலை சரியில்லை என்று கூறினார். அதனல் அவரை கோர்ட்டில் உள்ள பெஞ்சில் படுத்துக்கொள்ள நீதிபதி அனுமதி அளித்தார்.

சப்-இன்ஸ்பெக்டரை விசாரித்து வரும்பொழுது, வைத்தி பெஞ்சிலிருந்து திடீரென்று கீழே விழுந்தார். அதனல் நீதிபதி விசாரணையை ஒத்திவைத்தார். கோர்ட்டார் இன்று புதன்கிழமை விடுமுறை எடுத்துக்கொள்வதை யொட்டி, வழக்குவிசாரணைதொடர்ந்து மீண்டும் வியாழக்கிழமை (22-ந் தேதி) நடைபெறும்.

குதிரைப் பந்தயம் ஒழிப்பு

# அ.தி.மு.க. கோரிக்கை: கருணாநிதி மறு பரிசீலனை

சென்னை ஆக. 21—குதிரைப் பந்தயத்தை ஒழிப்பது பற்றி அ. தி. மு. க. உறுப்பினர் எட்மெண்ட் தெரிவித்த யோசனை மறு பரிசீலனை செய்யப்படும் என்று முதல் அமைச்சர் கருணாநிதி கூறினார்.

தமிழ்நாட்டில் வருகிற நவம்பர் முதல் தேதி முதல் குதிரைப் பந்தயம் ஒழிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

இதை மேலும் 3 மாதம் தள்ளிவைக்கக்கூடும் என்று தெரிகிறது.

சட்டசபையில், துணை பட்ஜெட் மீது நடந்த விவாதத்துக்கு பதில் அளிக்கையில் அவர் கூறியதாவது:—

மதுவிலக்கு, குதிரைப் பந்தய ஒழிப்பு ஆகியவை குறித்து ஆதரவு தெரிவித்து பேசிய அனைத்துக் கட்சியினருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

## அ. தி. மு. க. கோரிக்கை

குதிரைப் பந்தய ஒழிப்பால் அதில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலை வாய்ப்பு தர வேண்டும் என்ற கருத்து அரசு கவனத்தில் கொள்ளப்படும்.

குதிரைப்பந்தய சங்கம் இது குறித்து தகுந்த முன்னேற்பாடுகளை செய்துகொள்ள, மேலும் 3 மாத காலம் அவகாசம் தரலாம் என்று அ. தி. மு. கழகத் தலைவர் எட்மண்ட் கோரிக்கை விடுத்தார். இந்த கோரிக்கை பற்றி அரசு பரிசீலிக்கும்.

## கருணாநிதி உறுதி

2, 3 மாதகாலம் அவகாசம் தரலாம் என்பது பற்றி அரசு பரிசீலிக்குமே தவிர மீண்டும் குதிரை பந்தயத்தை அனுமதிக்கும் பேச்சுக்கு இடம் இல்லை என்பதை திட்டவட்டமாக தெரிவித்து கொள்கிறேன்.

இவ்வாறு கருணாநிதி கூறினார்.

முன்னதாக சபையில் நடந்த விவாதத்தின்போது, குதிரைப் பந்தய ஒழிப்பு பற்றி உறுப்பினர்கள் குறிபபிட்டார்கள்.

முனுஆதி (அ.தி.மு.க.): கூறியதாவது;

''குதிரைப் பந்தயத்தை ஒழிக்க முடிவு எடுத்தது நல்ல முடிவு அதைவரவேற்கிறேன்.

ஆனால், அங்கு 2 ஆயிரம் பேருக்குமேல் வேலை பார்க்கிறார்கள். அவர்களுக்கு நிவாரணம் தரவேண்டும். அல்லது அவர்களுக்கு வேலை கிடைக்க சிறிதுகால அவகாசம் தர வேண்டும்.

எட்மெண்ட் (அ.தி.மு.க):— இந்த திட்டத்தை வரவேற்கிறோம். இதை 6 மாதத்துக்கு முன்பே அறிவித்து இருந்தால் அங்கு வேலைபார்க்கும் தொழிலாளர்கள் மாற்று வேலைகள் தேடிக்கொள்ள வசதியாக இருக்கும். அல்லது 6 மாதத்துக்கு ஒத்திவைத்தால் வேறு வேலை தேடிக்கொள்ள வழி ஏற்படும்.

## மேலும் 3 மாதம் அவகாசமா?

கருணாநிதி:— தொழிலாளர்களுக்கு நிவாரணம் தர வேண்டும் என்பதை அரசு புறக்கணிக்காது. 6 மாதம் அவகாசம் கொடுக்கவேண்டும் என்கிறார். ஏற்கனவே 3 மாத காலம் அவகாசம் தந்து இருக்கிறோம். மேலும் 3 மாதம் தரவேண்டும் என்று கூறுகிறாரா?

எட்மண்ட்:— அவர்களுக்கு 3 மாதத்துக்கு நிவாரணம் தரமுடியும் என்றால் நீங்கள் செய்யுங்கள்.

## கோர்ட்டுக்கு போக தூண்டுதலா?

அனந்தநாயகி (இ. காங்);- அவர்களுக்கு 1976 வரை ''லைசென்சு'' தந்து இருக்கிறீர்கள். இப்போது திடீர் என்று நிறுத்த உத்தரவு. அவர்கள் கோர்ட்டுக்குப்போக வழிஇருக்கிறது.

கருணாநிதி: கோர்ட்டுக்கு போவார்கள் என்று சொல்வது அவர்கள் கோர்ட்டுக்கு போகவேண்டும் என்று கூறுவதைப்போல் இருக்கிறது.

கோவை செழியன் (அ. தி. மு. க); அரசு இந்த உத்தரவை சென்ற ஆண்டே பிறப்பித்து இருக்கலாம். திடீர் என்று போட்டதால் கோர்ட்டுக்கு போக வாய்ப்பு இருக்கிறது.

கருணாநிதி: 'இங்கு இப்படிப் பேசி, அவர்களை கோர்ட்டுக்கு போகத் தூண்டுவது சரி அல்ல. 1962 தேர்தல் அறிக்கையிலேயே, குதிரைப் பந்தய ஒழிப்பு பற்றி கூறப்பட்டு இருக்கிறது. எந்த திட்டத்தையும் முன்பே செய்து இருக்க வேண்டும் என்று கூறி குற்றம் சாட்டுவது நல்லது அல்ல

இவ்வாறு கருணாநிதி கூறினார்.

# கூட்டுறவு துறையில் மேலும் 3 தேயிலை தொழிற்சாலைகள்

சென்னை, ஆக. 21— தமிழகத்தில் கூட்டுறவு துறையில் மேலும் 3 தேயிலை தொழிற்சாலைகளை அமைக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளதாக நேற்று சட்டசபையில் மந்திரி மாதவன் கூறினார்.

தமிழகத்தில் தற்போது கூட்டுறவு முறையில நடத்தப்படுகிற 8 தேயிலை தொழிற்சாலைகளில் 7 தொழிற்சாலைகள் நஷ்டத்தில் ஓடுவதாக அவர் கேள்வி நேரத்தின் போது மேலும் தெரிவித்தார் கூடிய சீக்கிரம் இந்த தொழிற்சாலையின் நிலைமை சீர்பட்டுவிடும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

# ஓட்டல்கள் கட்ட சிமெண்ட் கிடையாது: சுப்ரமணியம் அறிவிப்பு

புதுடெல்லி, ஆக. 21—ஓட்டல்கள், சினிமாதியேட்டர்கள், அலுவலகங்கள் ஆகியவை கட்டுவதற்கு சிமெண்டைப் பயன்பத்தக்கூடாது என்று மத்திய மந்திரி சி. சுப்ரமணியம் அறிவித்தார்.

இந்தியா முழுவதும் சிமெண்டு பற்றுக்குறையாக இருப்பதால் சிமெண்டை பயன்படுத்துவதற்கு, டெல்லி சர்க்கார் சில கட்டுப்பாடுகளை விதித்து உள்ளது.

இந்த உத்தரவின்படி, சினிமா கொட்டகைகள், அலுவலக கட்டிடங்கள், கலை அரங்குகள், தங்கும் விடுதிகள் கடைகள் ஆகியவை கட்டுவதற்கு சிமெண்டை பயன்படுத்தக்கூடாது.

இவற்றுக்காக ஏற்கனவே அஸ்திவாரம்போட்டு முடிந்து மேலே வேலை தொடங்கிவிட்டால், தொடர்ந்து சிமெண்டை பயன்படுத்திக் கட்டி முடித்துக்கொள்ளலாம்.

சிமெண்டை பயன்படுத்தி ரோடு போடுவதும், நடைபாதைகள் அமைப்பதும், அடியோடு தடை செய்யப்பட்டிருக்கிறது.

அத்துடன் அத்தியாவசியம் இல்லாத கட்டிடங்கள் கட்டுவதற்கும் சிமெண்டை பயன்படுத்தக்கூடாது.

குடியிருப்புக்கான வீடுகள் கட்டுவதற்கு சிமெண்டை பயன்படுத்த தடை எதுவும் இல்லை.

இந்த சிமெண்டு கட்டுப்பாடு உத்தரவு நாளை (வியாழன்) முதல் ஒரு ஆண்டு காலத்திற்கு அமுலில் இருக்கும்.

அரசுத்துறை, தனியார் துறை எல்லோரையும் இந்த உத்தரவு கட்டுப்படுத்தும்.

இந்த சிமெண்டு கட்டுப்பாடு உத்தரவை பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் தொழில் வளர்ச்சி மந்திரி சி. சுப்பிரமணியம் நேற்று தாக்கல் செய்தார்.

## மாநில அரசுக்கு உத்தரவு

மத்திய மாநில அரசு நிறுவனங்கள் இது விஷயத்தில் முன் மாதிரியாக நடந்து மற்றவர்களுக்கு வழிகாட்டியாக விளங்க வேண்டும் என்று அதில் கேட்டுக் கொள்ளப்பட்டு இருக்கிறது.

வேலிகள் அமைக்க பயன்படுத்தும் கம்பங்கள், காம்பவுண்டுசுவர்கள், மைதானங்களுக்கு காண்கிரீட் போடுவது, பாதைகள் அமைப்பது, கம்பிவலை தட்டிகள்—சட்டங்கள் தயாரிப்பது ஆகியவற்றுக்கும் சிமெண்டை பயன்படுத்துவதை தடைசெய்ய வேண்டும் என்று அந்த உத்தரவில் கூறப்பட்டுள்ளது.

# பம்பாயில் கிலோ உப்பு ஒரு ரூபாய்

பம்பாய், ஆக. 21—பம்பாயில் உப்புக்குப் பஞ்சம் ஏற்பட்டுள்ளது. கடைகளில் உப்பு கிடைப்பதில்லை.

இப்போது உப்பு கள்ள மார்க்கெட்டில் ஒரு கிலோ ஒரு ரூபாய்க்கு விற்கப்படுகிறது.

கடந்த பத்து நாட்களாகவே உப்பு விலை ஏறி வந்தது. இப்போது கடைகளில் கிடைப்பதே இல்லை. உப்புக்கு ஏன் திடீர்பஞ்சம் ஏற்பட்டுள்ளது என்பதற்கு வர்த்தகர்களாலோ அரசு அதிகாரிகளாலோ விளக்கம் எதுவும் தரமுடியவில்லை. கடந்த ஆண்டு ஆகஸ்டில் உப்பு விலை ஒரு கிலோ 15 பைசாவாக இருந்தது.

சில மாதங்களுக்கு முன்னர் கல்கத்தாவில் உப்புக்குக் கடும் பஞ்சம் ஏற்பட்டு, உப்புக்கு ரேஷன் கொண்டு வரப்பட்டது நினைவிருக்கலாம்.

## சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்களுக்கு

# ரவுடிகள் மிரட்டல்

## கண்ணீர் மல்க கருணாநிதியிடம் மகஜர்

**சென்னை, ஆக. 21—நியாயமான கோரிக்கைகளை வைத்து உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்துவரும் சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்களை ரவுடிகளை வைத்து நிர்வாகத்தினர் மிரட்டுகிறார்கள்.**

ரவுடிகளின் அச்சுறுத்தலைத் தாங்க முடியாத தொழிலாளர்கள் கண்ணீர் மல்க முதல் அமைச்சர் கருணாநிதியிடம் நேரில் சென்று மகஜர் கொடுத்தனர்,

எம். ஜி. ஆருக்குச் சொந்தமான சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்கள், நியாயமான கூலி உயர்வு கோரிய தற்காக அவர்களைத் திருக்கைவாலால் அடித்தும், வேலையைவிட்டு நிறுத்தி விடுவேன் என்று மிரட்டியும் ஸ்டுடியோவை மூடிவிடுவேன் என்று அச்சுறுத்தியும், சத்தியா ஸ்டுடியோ நிர்வாகம் பழி வாங்கி வருவது தெரிந்ததே.

ஒவ்வொரு தொழிலாளியும் ரூ. 350 சம்பளம் கிடைத்தால்தான் வாழ முடியும் என்று எம். ஜி. ஆர். கூறியிருந்தார். ஆனால் சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்களுக்கு மட்டிலும் மற்ற ஸ்டுடியோக்களில் வழங்கப்படும் குறைந்த சம்பளமே கொடுக்கப்பட்டு வருகிறது.

இதைச் சுட்டிக்காட்டி, 100 தொழிலாளர்கள் அமைதியான முறையில் போராட்டம் நடத்தி வந்தார்கள். கடந்த 14ம் தேதியிலிருந்து உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

அவர்களை இப்போது நிர்வாகம், ரவுடிகளை வைத்து மிரட்டிக் கொடுமைப்படுத்தும் நிலைக்கு வந்துள்ளது

எம். ஜி. ஆரை நம்பி இனிப் பயன் இல்லை என்ற முடிவுக்குவந்த அந்த, அப்பாவித் தொழிலாளர்கள் 100 பேர்களும் நேற்று கண்ணீர் மல்க முதல் அமைச்சர் கருணாநிதியிடம் மகஜர் ஒன்றைக் கொடுத்துள்ளனர்.

அந்த மகஜரில் கூறப்பட்டுள்ளதாவது :—

தமிழக முதல்வர் அவர்களுக்கு சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்கள் எழுதிக் கொண்ட விண்ணப்பம் :

சத்தியா ஸ்டுடியோவில் சுமார் 100 தொழிலாளர்கள் வேலை பார்த்து வருகிறோம். சென்னையிலுள்ள மற்ற ஸ்டுடியோக்களைக்காட்டிலும் இங்கு மிகக் குறைவான சம்பளம் மொத்தமாகச் சேர்த்து ரூ. 120 மாதம் கொடுக்கப்படுகிறது. பஞ்சப்படி என்பது கிடையாது. மற்ற ஸ்டுடியோக்களில் வழங்கப்படும் சலுகை எதுவும் கிடையாது.

எனவே நாங்கள் எங்கள் சங்கத்தின் மூலம சம்பள உயர்வு, பஞ்சப்படி போனஸ் லீவுவசதி போன்றகோரிக்கைகளை நிர்வாகத்திற்கு அனுப்பி நேரடிப் பேச்சுவார்த்தைக்கு நிர்வாகம் இணங்காததால் நாங்கள் லேபர் ஆபீசருக்கு சமரசம் செய்து வைக்கும்படி கோரினோம். சமரசப் பேச்சுவார்த்தைகளுக்கு நிர்வாகத்தின் சார்பில் பொறுப்பான வரும் வருவதில்லை. லேபர் ஆபீசரின் ஆலோசனையையும் நிர்வாகம் ஏற்றுக்கொள்ள வில்லை.

எனவே தொழிலாளர்கள் வேறு வழியின்றி போதுமான முன்னறிவிப்புச் செய்து 14-8-74-ம் தேதி முதல் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். தொழிலாளர்கள் மிரவும் அமைதியான முறையில் இருக்கிறார்கள்.

### ரவுடிகள் மிரட்டல்

ஆனால் நிர்வாகம் ரவுடிகளைக்கொண்டு வந்து தொழிலாளர்களைப் பயமுறுத்தி வருகிறார்கள். வன்முறையில் ஈடுபடுகிறார்கள். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யும்போது வெளி ஆட்களை உள்ளே விடுவது சட்ட விரோதமான செயலாகும்.

எனவே தாங்கள் இதில் தலையிட்டு எங்கள் நியாயமான கோரிக்கைகளை பெற்றுத்தரவும் எங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவும் இதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்து எங்களுக்கு வழங்கக் கோருகிறோம்.

இவ்வாறு அந்த விண்ணப்பத்தில் கேட்டுக் கொள்ளப் பட்டிருந்தது.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஆக. 21—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 522 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 49 50

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1155 00
உள்ளூர் 1100 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 65

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி தீரவில்லை
மொத்த விலை தீரவில்லை

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 730 00
சில்லரை விலை ரூ. 7 60

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 620 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 97 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 197 00
முதல் ரூ. 202 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 153 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 50

**கடலைப்பிண்ணாக்கு**

கி.கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 86 50

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 460 00
முதல் ரூ. 462 00

## சிந்தாமணி சூபர்மார்க்கெட் சிற்றுண்டிசாலை

சென்னை, ஆக. 21—சென்னை அண்ணாநகர் சிந்தாமணி கூட்டுறவு சூபர்மார்க்கெட் சிற்றுண்டிசாலை திறப்பு விழா இந்த மாதம் 23-ந்தேதி மாலை 5-30 மணிக்கு அதன் தலைவர் ஜி. ஆர். கோவிந்தராஜுலு தலைமையில் நடைபெறும். கூட்டுறவு பதிவாளர் பி. விஜயராகவன், அந்த சிற்றுண்டிசாலையை திறந்து வைப்பார். சூபர்மார்க்கெட்டின் ஜெனரல் மானேஜர் கே. எஸ். ராமமூர்த்தி, பிரதம நிர்வாக அதிகாரி எம். தங்கவேலு கூட்டுறவு இலாகா சிறப்புச் செயலாளர் ஆர். நடராஜன், பர்வதம் நடராஜன், ஆகியோரும் விழாவில் கலந்து கொள்வார்கள். சந்திரகாந்தா கோவிந்தராஜுலு குத்துவிளக்கு ஏற்றி வைப்பார்.

சிந்தாமணி கூட்டுறவு சூபர்மார்க்கெட்டின் அண்ணாநகர் கிளையில் மேஜை, நாற்காலி பகுதி, தையல் வேலைப் பகுதி, ரேடியோ விற்பனை சர்வீஸ் பகுதி, புத்தகப் பகுதி ஆகிய மேலும் 4 புதிய பகுதிகள் அன்று திறக்கப்படும்.

இந்த ஆகஸ்ட் மாதத்தில் முதலாவது 20 நாட்களில் மட்டும் சிந்தாமணி சூபர் மார்க்கெட்டின் பிராட்வே, அண்ணாநகர் ஆகிய இரு கிளைகளிலும் மொத்த விற்பனை மதிப்பு 21 லட்சம் ரூபாயை மிஞ்சிவிட்டதாக பிரதம நிர்வாக அதிகாரி தங்கவேலு கூறினர்.

## அர்ச்சகர் மசோதா: செல்லுபடி ஆக்க நடவடிக்கை

புதுடெல்லி, ஆக. 21—கோவில்களில் அரிஜனங்களை அர்ச்சகர்களாக நியமிக்க வகை செய்யும் "தமிழ்நாடு மசோதாவைக் காப்பாற்ற" அரசியல் சட்டத்தை திருத்துவது பற்றி மத்திய அரசு ஆராயும் என்று நாடாளுமன்றத்தில் உள்நாட்டிலாகா துணை அமைச்சர் ராம்நிவாஸ மிர்தா கூறினர்.

இம்மசோதாவைச் செல்லாது என்று சுப்ரீம் கோர்ட் தள்ளுபடி செய்துவிட்டதால் இது பற்றி மத்திய அரசு பரிசீலிக்குமா என்று ஜி. லட்சுமணன் (தி. மு. க.) கேட்ட போது, அமைச்சர் மேற்கண்டவாறு கூறினர்.

குஜாராத்கிராமங்களில் அண்மையில் அரிஜனங்கள் மிருகத்தனமாகத் தாக்கப்பட்டதாகவும் கொல்லப்பட்டதாகவும், கூறப்படும் சம்பவங்கள் பற்றிய கவன ஈர்ப்புத்தீர்மானத்தின் மீது நடந்த விவாதத்தின் போது இந்தப்பிரச்சினை எழுந்தது,

### நீர் மட்டம்

சென்னை, ஆக. 17—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 68·80 | அடி |
| | மீட்டர் | |
| பெரியாறு | 6·01 | ,, |
| வைகை | 10·24 | ,, |
| பாபநாசம் | 20·38 | ,, |
| கிருஷ்ணகிரி | 10·25 | ,, |
| சாத்தனூர் | 14·04 | ,, |
| மணிமுத்தாறு | 15·51 | ,, |
| பெருஞ்சாணி | 10·32 | ,, |
| பிச்சிபாறை | 2·21 | ,, |

## தென்னகம் ஏட்டின் பித்தலாட்டத்தை எதிர்த்து மறியல்

சென்னை, ஆக. 21—நியாயமான கோரிக்கைகளுக்காக சத்தியா ஸ்டுடியோ ஊழியர்கள் போராட்டம்நடத்தி வருவதை திசை திருப்பும் தென்னகம் ஏட்டின்பித்தலாட்டத்தை கண்டித்து மறியல் நடத்த தொழிலாளர்கள் முடிவுசெய்துள்ளனர்.

இதுகுறித்து சத்தியா ஸ்டூடியோ தொழிலாளர்கள் இன்று விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது :—

தென்னகம் பத்திரிகைக்கு சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்கள் எச்சரிக்கை. தொழிலாளர்கள் பிரச்னைக்கு அரசியல் சாயம் பூசி பித்தலாட்டம் செய்யாதே.

ஊருக்குத்தான் உபதேசம்; உனக்கில்லையடி என்ற பழமொழிப்போல், மாநாடுகளிலும் பொதுக்கூட்டங்களிலும் முடிக்கமிட்டாரே எங்கள் முதலாளி; (எம். ஜி. ஆர்,) மாதம் ரூ. 350 கொடுத்தால்தான் ஒரு தொழிலாளி பிழைக்க முடியுமென்று சொன்னரே.

ஆனல் எங்களுக்குக்கொடுக்கப்படும் சம்பளம் ரூ. 120 தானே. இது நியாயமா? இதை நியாயமென்று வாதிடுகிறாயா? உனக்கு மானமிருந்தால் இது எந்த வகையில் நியாயம் என்பதை விவாதித்து வழங்கு.

'எனக்கும் இந்த ஸ்டுடியோவுக்கும் சம்பந்தமில்லை என்று ஏனோதானோ என்று எங்கள் முதலாளி (எம். ஜி. ஆர்) கூறிய பிறகுதான் நாங்கள் போராடத் துவங்கினோம். அவருடைய புகழைக் குறைக்க வேண்டும் என்பதல்ல எங்கள் நோக்கம். மற்ற ஸ்டுடியோக்களில் வழங்கப்படும் நியாயம் எங்களுக்கு இல்லையே என்பது தான் எங்கள் வருத்தம். ஊருக்கு உபதேசம் செய்பவர் இப்படி நடக்கலாமா என்பதே எங்கள் கேள்வி.

இந்த நியாயத்தை மறைத்து எங்கள் கோரிக்கையை அநியாயப்படுத்தி, எங்கள் போராட்டத்தைக் கிண்டல் செய்து நீ (தென்னகம்) பித்தலாட்டமாகச் செய்தி போட்டால், உன்னுடைய அலுவலகம் முன் மறியல் போராட்டம் நடத்துவோம் என்று எச்சரிக்கிறோம்.

இனியும் இதுபோன்று செய்திகள் போட்டால், சத்தியா ஸ்டுடியோவில் நீங்கள் அடிக்கும் கொட்டத்தை, பயங்கர அரசியல் சதித்திட்டத்தை பொதுமக்கள் மத்தியில் பகிரங்கமாக அம்பலப்படுத்துவோம்.

மேற்கண்டவாறு சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்கள் தங்கள் அறிக்கையில் கூறியிருக்கிறார்கள்,

## ரெயில்வே ஊழியர் போராட்டம்

# ஜனாதிபதி யோசனையை புறக்கணித்தது ஏன்?: ரெயில் மந்திரிமீது புகார்

**புதுடெல்லி, ஆக. 21—ரெயில் ஊழியர்களின் போராட்டம் சம்பந்தமாக ஜனாதிபதி கிரி கூறிய யோசனையை புறக்கணித்துவிட்டதாக ரெயில்வே மந்திரி மிஸ்ரா மீது நேற்று மக்கள் சபையில் பல உறுப்பினர்கள் குற்றஞ் சாட்டினார்கள்.**

இது பற்றி சபையில் சுமார் 2 மணி நேரத்திற்கு காரசாரமான வாய்ச்சண்டை நடந்தது. இறுதியில் எதிர்க்கட்சிகளின் உறுப்பினர்கள் அனைவரும் வெளிநடப்பு செய்தனர.

இது பற்றி அரசாங்கம் ஏதாவது தெரிவிக்கவேண்டும் என்று சபாநாயகர் உத்தரவிட்ட பிறகே சபையில் அமைதி ஏற்பட்டது.

ரெயில்வே ஊழியர்கள் நடத்திய வேலை நிறுத்தப் போராட்டத்தின் போது நாசவேலையில் ஈடுபட்டவர்களைத் தவிர மற்றவர்கள் மீது பழிவாங்கும் நடவடிக்கை எதுவும் எடுக்கப்படக் கூடாது என்று ரெயில்வே மந்திரி மிஸ்ராவுக்கு ஜனாதிபதி கிரி தெரிவித்திருந்த யோசனை சம்பந்தமாக நேற்று மக்கள் சபையில் மந்திரி மிஸ்ரா ஒரு அறிக்கை வெளியிட்டார். அதைத் தொடர்ந்து சபையில் குழப்பம் ஏற்பட்டது.

போராட்டத்தில் ஒவ்வொரு ரெயில்வே ஊழியர் மேற்கொண்ட பங்கு குறித்து தனித்தனியாக கவனிக்கப்படும் என்று ஜனாதிபதியிடம தாம் வாக்குறுதி அளித்ததாகவும் மிஸ்ரா குறிப்பிட்டார்.

ஜனாதிபதிக்கு கொடுத்த திட்டவட்டமான வாக்குறுதியை ரெயில்வே இலாகாவின் விதியாக மாற்றி அதன் தன்மையை குறைக்க மந்திரி மிஸ்ரா முயற்சிப்பதாக இந்திரஜித் குப்தா (கம்யூனிஸ்டு), பார்வதி கிருஷ்ணன் (கம்யூனிஸ்டு), எஸ். எம். பானர்ஜி (கம்யூனிஸ்டு), வாஜ்பாயி (ஜனசங்கம்) ஆகியோர் குற்றஞ் சாட்டினார்கள். ஜனாதிபதியின் ஆலோசனையை மத்திய அரசு ஏற்றுத்தான் தீரவேண்டும என்றும் ஆனல் அதை ரெயில்வே மந்திரி புறக்கணிப்பதாகவும் அவர்கள் புகார் கூறினார்கள்.

ஜனாதிபதியின் ஆலோசனைக் குறித்து பிரதமரின கருத்தை அறிய விரும்புவதாக ஹீரேன் முகர்ஜி கூறினர்.

கடைசியில் எதிர்க்கட்சி உறுப்பினர்கள் அனைவரும் கண்டனக் குரல் எழுப்பிய வண்ணம் வெளிநடப்பு செய்தனர்.

### ராஜ்யசபையில்

ராஜ்யசபையிலும் எதிர்க்கட்சியினர் இதே காரணத்திற்காக வெளிநடப்பு செய்தனர். கம்யூனிஸ்டு; மார்க்சிஸ்டு ஜனசங்கம் கிராந்தி தளம், சம்யுக்த சோஷலிஸ்டு ஆகிய 5 கட்சிகளின் உறுப்பினர்கள் இவ்வாறு வெளியேறினர்கள்.

ராஜ்யசபையில் சுமார் 40 நிமிட நேரத்திற்கு காரசாரமான விவாதம் நடந்தது.

## ரூ. 20 ஆயிரம் மதிப்புள்ள அரிசிமூட்டைகள் பறிமுதல்

பட்டுக்கோட்டை, ஆக. 21—லாரி புக்கிங் ஆபீசில் சோதனையிட்டு அதிகாரிகள் ரூ. 20 ஆயிரம் மதிப்புள்ள அரிசி மூட்டைகளைக் கைப்பற்றினர்.

பட்டுக்கோட்டை சிவில் சப்ளை தாசில்தார் பி. தெய்வநாயகம், ரெவினியூ இன்ஸ்பெக்டர் ஜெயராமன் ஆகியோர் பட்டுக்கோட்டை அருகே உள்ள மதுக்கூரில் ஒரு லாரி புக்கிங் ஆபீசை திடீர் சோதனையிட்டனர்.

# மக்கள் உபயோகிக்கும் பொருட்கள் மீது ரூ. 1096 கோடிக்கு வரிகள்

புதுடெல்லி, ஆக. 21—மக்கள் அன்றாடம் உபயோகிக்கும் பொருட்களின்மீது மத்திய அரசு கடந்த பல ஆண்டுகளில் ரூ. 1096 கோடி வரி விதித்துள்ளது என்று மக்கள் சபையில் இடது கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் ஜோதிர் மாய் பாசு கூறினர்.

ஆனல் ஆடம்பரப் பொருட்களின் மீது ரூ. 749 கோடிவரி தான் விதிக்கப்பட்டுள்ளது என்று அவர் குறிப்பிட்டார்.

மத்திய அரசு இப்போது இடைக்கால பட்ஜெட் மூலம் புதிதாக விதித்துள்ள வரிகளுக்கு அங்கீகாரம் அளிக்கும் மசோதா மக்கள் சபையில் நிறைவேறியது. விவாத முடிவில் மந்திரி சவான் பேசுகையில் சாதாரண மக்கள் பயன் படுத்தும் பொருட்கள் மீது வரி விதிக்கப்படவில்லை என்று.

இதை ஜோதிர்மாய் பாசு திட்டவட்டமாக மறுத்து மேற்கூறிய புள்ளிவிவரங்களை வெளியிட்டார்.

விவாதத்தின் போது மதுலிமாயி (சோஷலிஸ்டு) பேசுகையில் அரசாங்கத்தின் கொள்கைகளால்தான் நாட்டில் கருப்புப் பணம் தோன்றி வருகிறது என்றார்.

வரி விதிப்பு மசோதாவுக்கு எதிர்க்கட்சிகள் கொண்டு வந்த திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டு மசோதா நிறைவேறியது.

## செய்திச்சுருக்கம்

### சினிமா தியேட்டர்கள் திறக்கப்பட்டன

சென்னை, ஆக. 21—சென்னையில் கடந்த 5 நாட்களாக மூடப்பட்டிருந்த 67 சினிமா தியேட்டர்களும் நேற்று திறக்கப்பட்டன.

தமிழ் நாட்டில் மொத்தம் 1300தியேட்டர்கள் உள்ளன. பெரும்பாலான 'டெண்ட்' கொட்டகைகள் மூடப்படவில்லை.

தியேட்டர் உரிமையாளர்கள் பிரதிநிதிகள் நாளை (வியாழன்) முதலமைச்சரைச் சந்தித்துப் பேச இருக்கின்றனர்.

### ரெயிலில் புதிய சாதனம்

சென்னை. ஆக. 21—தென் பிராந்திய ரெயில்வேயில் மீட்டர் கேஜ் பிரிவில் அதிக பெட்டிகள் இணைக்கப்பட்டு ஓடும் மெயில், எக்ஸ்பிரஸ் ரெயில் வண்டிகளில் கார்டுக்கும் டிரைவருக்கும் இடையே வி. எச். எஸ். ரேடியோ தொடர்பு முறை ஏற்படுத்தப்பட்டுள்ளது.

எழும்பூர் பிரதம ஆப்பரேட்டிங் சூப்பரிண்டெண்ட் பி. எஸ். சாஸ்திரி இந்த முறையை துவக்கிவைத்தார்.

ரெயில் ஓடிக்கொண்டிருக்கும்போதே டிரைவரும் கார்டும் ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்ள இந்தப் புதிய சாதன அமைப்பு உதவியாக இருக்கும்.

### இளைஞர் காங்கிரஸ்ரகளை பற்றி விசாரணை

பம்பாய், ஆக. 21—டெல்லியில் சென்ற வாரம் நடைபெற்ற இளைஞர் காங்கிரஸ பேரணிக்குப் போய் திரும்பிய விசேஷ ரயிலில் பயணம் செய்த இளைஞர் காங்கிரசார் புல்சார் ரயில் நிலையத்தில் கீழ்த்தரமாக நடந்து கொண்டதுபற்றி நேரில் விசாரணை செய்வதற்காக நாடாளுமன்ற காங்கிரஸ் உறுப்பினர் துளசிதாஸ் தாசப்பா இரண்டொரு தினங்களில் பம்பாய்க்கு வருகிறார்.

### தேர்தல் செலவுக்கு உச்சவரம்பு இல்லை

புதுடெல்லி, ஆக. 21—தேர்தலின் போது அரசியல் கட்சிகள் இவ்வளவுதான் செலவு செய்யலாம் என்று கட்டுப்பாடு விதிக்கும் யோசனை எதுவும் இல்லை என்று நாடாளுமன்றத்தில் சட்ட அமைச்சர் கோகலே கூறினர்.

### விவசாய சொத்துக்கு வரி

போபால், ஆக 21— விவசாய அசையா சொத்தின் மீது இந்தியாவிலேயே முதன் முதலாக மத்திய பிரதேசத்தில் வரி விதிக்கப்பட்டுள்ளது;

இதற்கான மசோதா ம. பி. சட்டசபையில் நிறைவேறும். இந்த வரி மூலம் ஆண்டுக்கு ரூ. 6.50 கோடி கிடைக்கும் என மதிப்பிடப் பட்டுள்ளது.

### அமெரிக்க தூதர் கொலை: ஜனாதிபதிஅதிர்ச்சி

வாஷிங்டன், ஆக. 21—சைப்ரசில் அமெரிக்கத் தூதர் ராட்ஜர் பி. டேவிஸ் சுட்டுக் கொல்லப்பட்டது பற்றி அமெரிக்க ஜனாதிபதி அதிர்ச்சி தெரிவித்துள்ளார்.

சைப்ரசில் அமைதி ஏற்பட வேண்டிய அவசியத்தை இந்தச் சம்பவம் வலியுறுத்துகிறது என்று அவர் குறிப்பிட்டார்.

### 550 சவரன் தங்கம் பறிமுதல்

ஐதராபாத், ஆக. 21—ஐதராபாத் பழைய நகரில் ஒரு வியாபாரியின் வீட்டிலிருந்து பழைய தங்க நகைகள் உள்பட 4430 கிராம் தங்கம் (சுமார் 550 சவரன்) கைப்பற்றப்பட்டது. இதன் மதிப்பு சுமார் ரூ 1 லட்சத்து 50 ஆயிரம் ஆகும். தங்கக் கட்டுப்பாடு சட்டத்தின் கீழ் இந்த நடவடிக்கை மேற் கொள்ளப்பட்டது.



சென்னை சாஸ்திரி நகர் மங்கையர்க்கரசி மகளிர் மன்றத்தின் புதிய கட்டிடத்தை அமைச்சர் க. ராசாராம் கடந்த 9-ந் தேதி திறந்து வைத்தார். விழாவுக்கு வீட்டுவசதி வாரியத் தலைவர் லட்சுமிகாந்தம் பாரதி தலைமை வகித்தார். படத்தில் மன்றத் தலைவர் திருமதி பத்மினி அம்பு ரோசும், உறுப்பினர்களும் உள்ளனர்.

# முதியோர் பென்ஷனுக்கு மேலும் ரூபாய் 1 கோடி: கருணாநிதி அறிவிப்பு

சென்னை, ஆக. 21—முதியோர் பென்ஷனுக்காக இப்போது ரூ 1 கோடிக்கு மேல் செலவிடப்பட்டு வருவதாகவும், மேலும் ரூ. 1 கோடி செலவிட்டால் தகுதியுள்ள எல்லோருக்கும் இந்த உதவி கிடைக்கும் என்றால், அது குறித்து அரசு பரிசீலிக்கும் என்றும் முதலமைச்சர் கருணாநிதி இன்று சட்டசபையில் அறிவித்தார்.

இன்று கேள்வி நேரத்தின் போது கம்யூனிஸ்டு உறுப்பினர் சோ. அழகிரிசாமி முதியோர் உதவி தொகை வழங்க ஆண்டுதோறும் அனுமதிக்கப்படும் தொகை எவ்வளவு என்று கேட்டார்.

முதலமைச்சர் கருணாநிதி இதற்குப் பதிலளிக்கையில், 1962-63ம் ஆண்டு முதல் 1973-74 வரை ஆண்டு தோறும் அனுமதிக்கப்பட்டுள்ள தொகை விவரத்தை தெரிவித்தார்.

அழகிரிசாமி: உறவினர்கள் இல்லாமல் கஷ்டப்படும் முதியோர்களுக்கு மாதம் 20 ரூபாய் கொடுக்கப்படுவதால் ஒருவேளை உணவாவது சாப்பிட முடிகிறது. ஆகையால் தகுதியுள்ள அனைவருக்கும் இதை வழங்கும் வகையில் விதிகளைத் திருத்த அரசு முன்வருமா?

முதல்வர்: ஆண்டுக்கு 1 கோடி ரூபாய் என்று வரையறைசெய்து ஒதுக்கப்பட்டிருந்தாலும் அதற்கு அதிகமாகவே செலவிடப்பட்டிருக்கிறது. இப்போது 43 ஆயிரத்து 673 பேர் முதியோர் தொகை பெறுகிறார்கள்.

## 55 வயசாக குறைப்பு

ஏற்கனவே 65 வயதான அனாதைகளுக்கு கொடுக்கப்பட்டு வந்தது. உடல் ஊன முற்றவர்களாக இருந்தால் 60 வயது என்று நிர்ணயம் செய்யப்பட்டிருந்தது. அது இப்போது 55 வயது என்று மாற்றியமைக்கப் பட்டிருப்பதுடன், உடல் ஊனமுற்றோர் பட்டியலில் ஊமை, செவிடர்களும் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். தகுதியுள்ள எல்லோருக்கும் கொடுக்க மேலும் ரூ. 1 கோடி அளவுக்குத் தான் அதிகம் செலவாகும் என்ற நிலை இருந்தால் அது குறித்துப் பரிசீலிக்க ஆட்சேபணையில்லை.

பொன்னப்ப நாடார்:— உதவித்தொகை கோருவோர் மருத்துவச் சோதனை செய்ய வேண்டுமென்று கோரப்படுவதால், இலவசமாக மருத்துவ சோதனைக்கு ஏற்பாடு செய்யப்படுமா?

முதல்வர்: பரிசீலனை செய்யலாம்.

## விதவைகளுக்கு உதவி

வீராசாமி: வயது வரம்பு பார்க்காமல் விதவைகளுக்கு உதவி தொகை கொடுக்க அரசு முன் வருமா?

முதல்வர்: இதை நிதி ஆதாரத்தை வைத்து அணுக வேண்டும்.

குமாரசாமி: இப்போது இதை அரைகுறையாகச் செயல்படுத்துவதால் கஷ்டம் ஏற்பட்டு வருகிறது. ஆகையால் ஒரு 5 ஆண்டுக்குப் பிறகாவது சமுகப்பாதுகாப்பு திட்டத்தை செயல்படுத்தும் நோக்குடன் இப்போதே திட்டமிடுவது பற்றி அரசு ஆராயுமா?

முதல்வர்: சமூகநலத் திட்டம் தயாராகி வருகிறது. அது செயல்படுத்தப்பட்டால் விதவைகளுக்கு மட்டுமல்லாமல் தகுதி வாய்ந்த அனைவரும் இதனால் பயனடைவர். இது அரைகுறையாக செயல்படவில்லை.

# அரிசி விலை குறைப்புக்கு பாத யாத்திரை: மார்க்சிஸ்ட் முடிவு

மதுரை, ஆக. 21—தமிழ் நாட்டில் அரிசி விலை குறைப்புக்காக பாதயாத்திரைக் கிளர்ச்சியை நடத்த தமிழ்நாடு மார்க்சிஸ்ட் கட்சி தீர்மானித்துள்ளது. இந்தக் கிளர்ச்சி வருகிற 1-ந் தேதியிலிருந்து 10-ந் தேதி முடிய நடைபெறும்.

மதுரையில் நடந்த தமிழ்நாடு மார்க்சிஸ்ட் கட்சியின் செயற்குழு கூட்டத்தில் இது சம்பந்தமாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

அந்த தீர்மானத்தில் கூறப்பட்டதாவது:—

'உணவு தானியங்களின் மொத்த வியாபாரத்தை மத்திய அரசு தன்கையில் எடுத்துக்கொள்ள மறுத்ததால், இன்று நாடு முழுவதிலும் கொடுமையான விலைவாசி உயர்வு மக்களை வாட்டி வதைக்கிறது. மத்திய அரசின் இந்தப் பிற்போக்குக் கொள்கையைப் பின்பற்றி தி.மு.க. அரசாங்கம் தமிழ்நாட்டில் அரிசி மொத்த வியாபாரத்தைத் தன்கையில் எடுத்துக் கொள்ள மறுத்தது.

இதன் விளைவாக அரிசியின் விலை பயங்கரமாக உயர்ந்து தமிழ் மக்களை சீரழித்துக் கொண்டு வருகிறது. நிலப்பிரபுக்களும், பதுக்கல்காரர்களும், மொத்த வியாபாரிகளும் அரிசியைப் பதுக்கி வைத்துக்கொண்டு கொள்ளை லாபமடித்து வருகின்றனர். 5 ரூ, 6 ரூ. என்ற விலையிலும் அதற்கு அதிகமாகவும் ஒரு படி அரிசி விற்பனையாகிறது.

வருகிற குறுவை மகசூலில் லெவிமுறை கொள்முதலைக் கூட செய்யப் போவதில்லை என்றும் இன்று அரிசி விலை உயர்ந்துள்ளது தவிர்க்க முடியாதது என்றும் கருணாநிதி அறிவித்துள்ளார். இதைவிட பொறுப்பற்ற மக்கள் விரோத நிலை வேறு எதுவும் இருக்க முடியாது என்று மாநில செயற்குழு சுட்டிக்காட்ட விரும்புகிறது.

## சுரண்டல் கும்பல்

இந்தச் சுரண்டல கும்பலைப் பாதுகாத்து, நிலப்பிரபுக்களுக்குத் துணையாக நிற்கும் தி. மு. க. அரசின் மக்கள் விரோதக் கொள்கையை மாநில செயற்குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

அரிசிவிலை உயர்வை எதிர்த்தும், மலிவு விலையில் அரிசி கிடைப்பதற்காகவும் தமிழகத்தின் மக்கள் பல இடங்களில் கிளர்ச்சியில் ஈடுபட்டதை மாநில செயற்குழு பாராட்டுகிறது.

மக்களின் உணவுக்காக கிளர்ச்சி செய்த இவர்களின் மீது போடப்பட்டுள்ள வழக்குகளை தமிழ்நாடு அரசாங்கம் ரத்துசெய்ய வேண்டுமென்றும் இவர்கள் அனைவரையும் விடுதலை செய்ய வேண்டுமென்றும் கட்சியின் மாநில செயற்குழு கோருகிறது.

## கிலோ ரூ. 1-க்கு விற்கலாம்

உடனடியாக நிலப்பிரபுக்களிடமும், பதுக்கல்காரர்களிடமும் உள்ள நெல்லை

1-ம் பக்கம் பார்க்க

5-ம் பக்கம் தொடர்ச்சி

1973-ம் வருடத்தில் அரசாங்கம் நிர்ணயித்த கொள்முதல் விலையான குவிண்டாலுக்கு 70 (எழுபது) என்ற விகிதப்படி தமிழ்நாடு அரசாங்கம் கறாராகக் கொள்முதல்செய்ய வேண்டும். வருகிற குறுவை அறுவடையிலும் இந்தக்கொள்முதல் உறுதியுடன் நடத்தப்படவேண்டும். இந்த விலையில் கொள்முதல் செய்தால் கிலோ அரிசி ஒரு ரூபாய் என்ற விலையில் மலிவு தான்யக் கடைகளின்மூலம் மக்களுக்கு விநியோகிக்க முடியும். இந்த வழி ஒன்றுதான் மக்களுக்கு உணவுவளிக்க சரியான வழியாகும்.

பல்வேறு அரசியல் கட்சிகளும் தற்பொழுது ஒருபடி அரிசி ரூபாய் இரண்டிற்கு விற்பனை செய்ய வேண்டுமென்று கோறுகின்றன. ஒரு படி அரிசி இரண்டு ரூபாய்க்கு விற்பனை செய்யவேண்டுமென்றால், ஒரு குவிண்டால் நெல்லை ரூபாய் 70க்கு கொள்முதல் செய்தால் மட்டுமே சாத்தியமாகும் என்பதை மாநில செயற்குழு எடுத்துக் காட்டுகிறது.

## பாத யாத்திரை

இந்தக் கொள்கையை பரவலாக மக்களிடம் எடுத்துக்கூறி இக்கோரிக்கைக்கு ஆதரவாக அவர்களைத் திரட்டுவதற்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சக்கூலி கிடைக்கவும், மத்திய அரசின் ஊதிய முடக்கச் சட்டத்தை எதிர்க்கவும், தமிழ்நாடு முழுவதிலும் கட்சியின் எல்லாக் கமிட்டிகளும், கிளைகளும் விரிவான பாத யாத்திரை அல்லது சைக்கிள் யாத்திரை பிரச்சார இயக்கத்தை 1974 செப்டம்பர் 1ம் தேதி முதல் 10ந் தேதி முடிய நடத்தும்படி மாநில செயற்குழு கேட்டுக் கொள்கிறது என்று தீர்மானத்தில் கூறப்பட்டது.

# புல்பூண்டை அகற்றவும் டில்லியிடம் அனுமதி

சென்னை, ஆக. 21—சென்னை செயிண்ட் ஜார்ஜ் கோட்டையைச் சுற்றியுள்ள அகழியைப் பழுது பார்த்து கடல் நீரை விடச் செய்யும் திட்டத்திற்கு மத்திய அரசின் அனுமதியை சென்னை வந்திருந்த மத்திய துணை அமைச்சரிடம் நேரடியாகக் கோரியதாகவும், பல மாதங்கள் ஆகியும் டெல்லியின் அனுமதி இன்னும கிடைக்கவில்லை என்றும் முதலமைச்சர் கருணாநிதி சட்டசபையில் ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில் கூறினார்.

கோட்டையைச் சுற்றி வளர்ந்திருக்கும் புதர்களையும், புல்பூண்டுகளையும் அகற்றி சுத்தப்படுத்துவதற்குக் கூட மத்திய அரசின் அனுமதி பெறவேண்டியிருந்தது என்று அவர் மேலும் தெரிவித்தார்.



## அமைச்சர் விளக்கம்:

# படகு விபத்துக்கு யார் பொறுப்பு?

சென்னை, ஆக. 21—சென்னை கூவம் ஆற்றில் நடைபெற்ற படகு விபத்து பற்றி விவாதிக்க வேண்டும என்று கோரி இன்று சட்ட மன்றத்தில் அவசரத் தீர்மானம் கொண்டுவரப்பட்டது.

அதிமுக உறுப்பினர்களான எச். வி. ஹாண்டே, கோவை செழியன், வி. சௌந்திரபாண்டியன், வலது கம்யூனிஸ்டு உறுப்பினர் அழகிரிசாமி, சுதந்திரா உறுப்பினர் வெங்கடசாமி ஆகியோர் இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்து பேசினர்.

இதற்கு அமைச்சர் ப. உ. சண்முகம் பதிலளிக்கையில் கூறியதாவது:—

கடந்த 15-ந் தேதி இரவு இந்தப் படகு விபத்து நிகழ்ந்திருக்கிறது. அந்தப் படகில் 9 பேர் இருந்ததாகத்தான் கணக்குள்ளது. மற்கொண்டு 3 ஆண்களும் ஒரு பையனும் இருந்ததாகக் கூறப்படுகிறது. கணக்குப்படி படகு ஓட்டியைச் சேர்த்து 10 பேர் இருந்ததாகத்தான் தகவல் உள்ளது.

இரவில் நீருற்று அருகில் படகு சென்றபோது பலமான காற்று அடித்தது. அப்போது நீரூற்றின் தண்ணீர் படகுமீது விழுந்தபோது படகு ஒதுங்கியது. அப்போது கவிழ்ந்திருக்கிறது.

படகில் அதிகப்படியாக 4 பேர் இருந்ததாகக் கூறப்படும் கூற்றை சரிபார்க்க வேண்டியுள்ளது. அந்தப் படகு மூழ்கக்கூடியது அல்ல. என்கிறார்கள். இதே போன்ற ஒரு படகில் 13 பேர்களை ஏற்றி அதில் தண்ணீரும் நிரப்பி சோதனை செய்து பார்த்ததில் அந்தப்படகு மூழ்கவில்லை. விபத்துக்குள்ளான படகை ஓட்டிய நபரையும், படகுக் குழாம் மேலாளரையும் போலீசார் கைது செய்துள்ளனர்.

படகில் மிதவைபோன்ற பாதுகாப்புச் சாதனங்களை வைக்கவும், இன்சூரன்ஸ் வசதி செய்யவும் ஏற்பாடு

1-ம் பக்கம் பார்க்க

4-ம் பக்கம் தொடர்ச்சி

செய்யச் சொல்லியிருக்கிறோம். பயணிகள் உயிருக்கு அரசு பொறுப்பில்லை; குத்தகைதாரர்தான் பொறுப்பாளியாவார். விபத்து எதிர்பாரா விதமாக நடந்ததா, அல்லது குத்தகைதாரர்தான் விபத்துக்காரணமா என்று விசாரித்து வருகிறோம். நிர்வாகப்பொறியாளர் இதுபற்றி விசாரணை நடத்தி வருகிறார். 'உங்கள் லைசென்சை ஏன் ரத்து செய்யக் கூடாது?' என்று கேட்டு குத்தகைதாரருக்கும் நோட்டீஸ் அனுப்பப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் ப. உ. சண்முகம் பதில் கூறியபின், சபாநாயகர், அவசரத் தீர்மானத்துக்கு அனுமதி தர மறுத்தார்.


Printed by S.V.G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-600028, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowrirajulu.
Honorary Editor: N. Muthukumarasami.